# ஸ்ரீராமாநுஜன்-393, 394

ஆசிரியர்:
ஸ்ரீகாஞ்சீ மஹாவித்வான் P. B, அண்ணங்கராசாரியர்


தொகுதி 34 | துன்மதி ஸ்ரீ சித்திரை, வைகாசிமீ 1981 ஜூன். | பகுதி 1, 2


## தேவப்பெருமாள் மஹோத்ஸவ பூர்த்திகள்



ஸ்ரீ காஞ்சீ தேவராஜப்பெருமாளுக்கு வைகாசி மாதத்தில் இரண்டு மஹோத்ஸவங்கள் நடைபெறுவது வழக்கம். ஒன்று *வையங்கண்ட வைகாசித் திருநாள் இதுதான் ப்ரஹ்மோத்ஸவமென்பது. ப்ரஹ்மோத்ஸவம் பத்து நாளைய உத்ஸவமானாலும் திருத்தேர்த் திருநாள் மூன்று நான்கு நாள் நீடிப்பதுமுண்டு. இந்த ஸம்வத்ஸரம் திருத்தேர் ஒரே நாளில் நிலை சேர்ந்துவிட்டபடியால் அடைவே திருவோணத் தினன்று அவபிரதம் நடைபெற்று மறுநாள் மாலை துவஜாவரோஹணமாயிற்று. பிறகு அச்விநீ

நக்ஷத்திரத்தில் வஸந்தோத்ஸவம் தொடக்கமாகிப் புநர்வஸுவில் அவ ப்ரதமாயிற்று. எதிர்பார்த்த மழைத் தொந்திரவு முதலியன ஒன்றுமின் றியே அழகாக உத்ஸவஸமாப்தியானது விசேஷம். ... ✻

## அடியேனுடைய விலக்ஷணமான திவ்யதேசாநுபவம்

அடியேன் [பத்ராதிபன்] சில ஸம்வத்ஸரங்களாகக் கங்குலும் பக லுங்கண்டுயிலறியாமே யிருத்தலால் நெஞ்சிலோடும் அநுபவங்கள் விலக்ஷணங்களானவை. அவ்வநுபவங்களைப் பல ரஸிகர்களும் அநு பவிக்கும்படி பொறித்துவைக்க ஆசையுண்டாகிறது. திவ்யப்ரபந்த ப்ரவணர்களும் ப்ரவீணர்களும் அநுபவிப்பது.

ஆழ்வாரருளிச் செயல்கள் பெரும்பாலும் திவ்யதேசாநுபவப்ர தானங்களென்பது தெரிந்ததே. அதிலும் திருமங்கையாழ்வாருடைய திவ்யப்பிரபந்தங்கள் விசேஷித்தவை. ஒவ்வொரு திவ்ய தேசத்திற்கு ஒருபதிகம்—இரண்டு மூன்று நான்கு ஐந்து பதிகங்கள் பாடுவது முண்டு. திருநறையூர்க்கும் திருக்கண்ணபுரத்திற்கும் ஒவ்வொரு சதகம்பாடியுள் ளார் என்பதும் தெரிந்ததே. ஒரு பாசுரத்திலேயே பல திவ்ய தேசங் களை யநுபவிப்பதென்பது வெகு விலக்ஷணமான அநுபவம்.

அதைப்பற்றியே இங்கு விஜ்ஞாபிக்கிறேன். ஒரு பாசுரத்தில் இரண்டு திருப்பதிகளையநுபவிப்பது விசேஷமாகக் கிடைக்கும்; பெரிய திருமொழியில் பத்தாம்பத்தின் முதற்பதிகம் ×ஒருநல் சுற்றமென்பது. இதில் ஒன்பது பாசுரங்களிலும் இரண்டு திவ்ய தேசங்களையநுபவிப்பது விலக்ஷணமானது,

"நேற்று திருநீர்மலையில் கண்டேன்; இன்று திருக்கண்ணமங்கை யில் காண்கிறேன் நேற்று திருவேங்கடத்தில் கண்டேன்; இன்று திருத்தண்காவில் காண்கிறேன்" இங்ஙனமாகவே பதிகம் முழுவதும் செல்லுகின்றது. இதன் சுவையைப் பெரியவாச்சான்பிள்ளை யருளிச் செய்வது பரம போக்யம், அதன் ஸாரஸங்க்ரஹம் கேண்மின்; இவ் விருள்தரு மாஞாலத்தில் இவ்வாழ்வார்க்கு இருப்பு அஸஹ்யமாகித் திருநாடு செல்ல விரைவு உண்டானவளவில் எம்பெருமான் இவர்க்கு

இவ்விபூதியிலே சில திருப்பதிகளைக்காட்டி இவருடைய ஆசையை மறைத்திட, இவரும் திவ்ய தேசாநுபவத்தாலே களித்துப் போது போக்கி நின்றார். இனி, பழைய ஆசையே இவர்க்குத் தலையெடுத்தா யிற்று, அதாவது இக் கொடுவுலகத்தினின்றும் நலமந்தமில்லதோர் நாடாகிய பரமபதத்திற்குச் செல்லவேணுமென்னும் விருப்பம் கிளர்ந்தது 'எம்பெருமான் இனி நம்முடையய அபிமதத்தைத் தலைக்கட்டியல்லது நில்லான்' என்கிற நிச்சயமுந்தோன்றிற்று. பயணம் புறப்படுவதாகவே பாரிப்புக் கொண்டார். பிறந்தகத்தினின்றும் புக்ககம் புறப்படுகின்ற பெண்பிள்ளை தான் நெடுநாள் வசித்தவிடத்திலே தன்னோடு மிகவும் முகம் பழகி யிருந்த பரம ப்ரேமாஸ்பதரான சில பெண்பிள்ளைகளைச் சென்று பணித்து 'நங்காய் நான் போய் வருகிறேன், மாதே! நான் போய் வருகிறேன்' என்று சொல்லிவரச் சில குறடுகள் ஏறியிறங்குமா போலே, இவ் வாழ்வாரும் தம் புக்ககமாகிய பரமபதத்தின் பயணத்திற் குப் பூர்வாங்கமாகத் தமது மிக்க ஈடுபாட்டுக்கிடமான திருப்பதிகளிலே சொல்லிக் கொள்வதாக நுழைந்து புறப்படுகிறார் இத்திருமொழியில்*

## ஒருபாசுரத்தில் மூன்று திவ்ய தேசாநுபவம்

பெரியாழ்வார் திருமொழி (2—6—2) குடந்தையும் கோட்டியூரும் பேரும் எங்குந் திரிந்து விளையாடுமென்மகன்.

## ஒரு பாசுரத்தில் நான்கு திவ்ய தேசங்கள்

(பெரிய திருமொழி 8—2—3) *அருவிசோர் வேங்கடம் நீர்மலை யென்று வாய்வெருவினாள், மெய்யம் வினவி யிருக்கின்றாள், பெருகு சீர்க்கண்ணபுரமென்று பேசினாளுருகினாள்* ப்ரக்ருதம் சோழநாட்டுத் திருப்பதிகளிலொன்றாகிய திருக்கண்ணபுரத்தின் அநுபவம் செல்லா நின்றது வடநாட்டுத் திருப்பதிகளில் திருவேங்கடமும், தொண்டை நாட்டுத் திருப்பதிகளில் திருநீர்மலையும், பாண்டிநாட்டுத் திருப்பதி களில் திருமெய்யமும் விரவுகின்றது.

## ஒரு பாசுரத்தில் ஐந்து திவ்ய தேசாநுபவம்

பெரிய திருமொழி 2—4—8) *இரும்பொழில் சூழ் நன்றாய புனல் நறையூர் திருவாலி குடந்தை தடந்திகழ் கோவல் நகர், ....மாமலையா

வது நீர்மலையே× (இதில்) திருநறையூர், திருவாலி, திருக்குடந்தை, திருக்கோவலூர், திருநீர்மலை—ஆக ஐந்து திருப்பதிகளின் அநுபவம்.

## ஒருபாசுரத்தில் ஆறு திருப்பதிகளின் அநுபவம்

(திருக்குறுந்தாண்டகம் 19 பா.) உலகமேத்துங்கண்டியூர் அரங்கம் மெய்யம் கச்சிபேர்மல்லையென்று மண்டினார் உய்யலல்லால் மற்றையார்க்கு உய்யலாமே× (இப்பாசுரத்தில் சயனத் திருக்கோலத் திருப்பதிகள் காண்க.)

## ஒருபாசுரத்தில் ஏழு திருப்பதிகளின் அநுபவம்

திருமழிசைப்பிரான் நான்முகன் திருவந்தாதியில் (36) ×நாகத்தணைக் குடந்தை வெஃகாத் திருவெவ்வுள், நாகத்தணையரங்கம் பேர் அன்பில், நாகத்தணைப்பாற்கடல் கிடக்குமாதி நெடுமால், அணைப்பார் கருத்தனாவான்.× திருநெடுந்தாண்டகத்தில் (8) ×நீரகத்தாய்! நெடுவரையினுச்சிமேலாய்!× என்கிற பாசுரம் திவ்யதேசமயமாயிருப்பதில் கொள்ளமாளாவின்பவெள்ளம். ... ... ✳

# இனி பகவத்கதானுபவம்

கீழே திவ்யதேசாநுபவம் செய்ததுபோல விலக்ஷணமான பகவத்கதாநுபவமும் செய்யலாகிறது. ஆழ்வார்கள் திவ்யதேசாநுபவங்களில் எப்படி பழுத்தவர்களோ, அப்படியே ஸ்ரீராமக்ருஷ்ணாதிகளின் திவ்ய சரிதாநுபவங்களிலும் பழுத்தவர்கள். ×எண்ணெய்க்குடத்தை யுருட்டி யிளம்பிள்ளை கிள்ளியெழுப்பிக், கண்ணைப் புரட்டி விழித்துக் கழகண்டு செய்யும் பிரானே!× மச்சொடுமாளிகையேறி மாதர்கள் தம்மிடம்புக்குக், கச்சொடுபட்டைக் கிழித்துக் காம்புதுகிலவைகீறி நிச்சலும் தீமைகள் செய்வாய்× என்றிப்படி க்ருஷ்ணாவதார சரிதைகளையும், இராக்கதர் வாழிலங்கை பாழாளாகப் படைபொருதான் என்றிப்படி ஸ்ரீராமாவதார சரிதைகளையும் அளவுகடந்து அநுபவித்துள்ளார்கள். ஒருபாசுரத்தில் ஒரு சரிதை, இரண்டு மூன்று நான்கு ஐந்து ......இப்படி யநுபவித்தல் திவ்யதேச விஷயத்திற்போல சரித்ர விஷயத்திலுமுள்ளது. ஒரு சிறு வெண்பாவில் பத்துச் சரிதைகளைப் பொய்கையாழ்வார் அநுபவித்தருளி யிருப்பது பாரீர்; முதல் திருவந்தாதியில் (54)—

"அரவமடல் வேழம்ஆன் குருந்தம் புள்வாய்
குரவை குடமுலை மற்குன்றம்—கரவின்றி
விட்டிறுத்து மேய்த்தொசித்துக் கீண்டு கோத்தாடி
உண்டட் டெடுத்த செங்கணவன்."

நாலாயிரத்தினுள் இத்தகைய பாசுரம் இஃதொன்றே.

**கரவு இன்றி**—மறைவில்லாமல் ஸர்வலோக ப்ரஸித்தமாம்படி **அரவம்விட்டு**—காளியநாகத்தைவலியடக்கி உயிரோடு விட்டிட்டும் **அடல்வேழம் இறுத்து**—பொருவதாக வந்த குவலயாபீடமென்னும் யானையின் தந்தத்தை முறித்து அதனுயிர் தொலைத்தும், **ஆன் மேய்த்து**—பசுக்களை மேய்த்தும், **குருந்தம் ஒசித்து**—அஸுராவேசமுடைய குருந்த மரத்தை ஒடித்துப் பொகட்டும், **புள்வாய் கீண்டு**—பகாசுரனுடைய வாயைக் கிழித்தும், **குரவைகோத்து**—ராஸக்ரீடையை இடைப் பெண்களோடு கைகோத்து ஆடியும், **குடம் ஆடி**—குடங்களைக்கொண்டு கூத்தாடியும், **முலை உண்டு**—பூதனையின் முலையை அவளுடைய உயிரோடு உறிஞ்சியுண்டும், **மல் அட்டு**—கம்ஸனால் ஏவப்பட்ட மல்லர்களைக் கொன்றும், **குன்றம் எடுத்து**—கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்தும்—ஆகவிச் செயல்கள்—கண்ணபிரானது காளியமர்தனம் முதலிய அரிய செயல்களை அநுஸந்தித்த ஆழ்வார் அவற்றில் உள்குழைந்து ஈடுபட்டு மேலொன்றும் சொல்லமாட்டாமையால் ஒரு வினைமுற்றுச் சொல்லவும் மாட்டாது விட்டனர், இப்பாசுரத்தைக்கொண்டே காளமேகப் புலவர்;

உடுத்ததுவும் மேய்த்ததுவும் உம்பர்கோன் தன்னால்
எடுத்ததுவும் பள்ளிக் கிசையப்—படுத்ததுவும்
அந்நாளெறிந் ததுவும் அன்பின் இரந்ததுவும்
பொன்னு வரை யிலைகாய்பூ.''

என்று பாடினர் போலும்! ஆயின் ஆழ்வார் பாசுரத்திற்போன்று பத்துச் சரிதைகளிங்கு உணர்த்தப்படவில்லை, மூன்றும் திருவந்தாதியில் (60) 'பெற்றம்பிணை மருதம் பேய்முலை மாச்சகடம் முற்றக் காத்தூடு போய் உண்டுதைத்து' என்னும் முன்னடிகளும் இங்கு நோக்கத்தக்கன.

2

நினைவுக்கு வந்ததொன்று நவிலக் கேண்மினே. பெரியாழ்வார் திரு மொழியில்—

*"ஆமையாய்க் கங்கையாய் ஆழ்கடலாய் அவனியாய் அருவரைகளாய்*
*நான்முகனாய் நான்மறையாய் வேள்வியாய்த் தக்கணையாய்த் தானுமானான்*
*சேமமுடைநாரதனார் சென்றுசென்று துதித்திறைஞ்சக் கிடந்தான்கோயில்*
*பூமருவிப் புள்ளினங்கள் புள்ளரையன்புகழ் குழறும் புனலரங்கமே(4—9—5)*

இப்பாட்டிலநுஸந்திக்கப்பட்ட கதையை எமது தீபிகையுரையிலும் 'திவ்யப்ரபந்த பகவத் கதாம்ருதம்' என்னும் எமது தனி நூலிலும் விரித்துரைக்கக் காண்க.

## கூரத்தாழ்வானுடைய திருக்கண்

பொய்கைக் கரையில் முதலைவாய்க்கோட்பட்ட கஜேந்திராழ்வானுடைய ரக்ஷணகதையை ஆழ்வார்கள் பலரும் ஆசாரியர்கள் பலரும் பேசியுள்ளார்கள். பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தரசதகத்தில்—
1. தேவீஹஸ்தாம்புஜேப்ய:, 2. அதந்த்ரிதசமூபதி, 3. யம்பச்யந் விச்வதுர்யாம், 4. ஸ்ரீரங்கேசய சரணம் மமாஸி× என்கிற நான்கு சுலோகங்களினால் விலக்ஷணமாகவே அருளிச் செய்துள்ளார். இவற்றில் ஒவ்வொரு சுலோகமும் அற்புதமானதே. ஆனாலும், இந்தச் சரிதையைப் பேசியருளின ஆழ்வானுடைய ஒரு சுலோகத்திற்கு ஈடாகாது,

பஞ்சஸ்தவங்களுள் முதல் ஸ்தவமான ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் கஜேந்த்ர ரக்ஷண விஷயமான சுலோகம் ஒன்றே;—

"விச்வம் தியைவ விரசய்ய நிசாய்ய பூயஸ்
ஸஞ்ஜஹ்ருஷஸ் ஸதி ஸமாச்ரிதவத்ஸலத்வே,
ஆஜக்முஷஸ் தவ கஜோத்தமப்ரும்ஹிதேந
பாதம் பராமம்ருசுஷோபிச கா மநீஷா."

இதில் முதல் மூன்றுபாதங்கள் இருக்கட்டும்; பிரபஞ்சங்களின் ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களை ஸங்கல்ப மாத்திரத்தாலே நிர்வஹித்தருளா நின்ற நீ கஜேந்த்ர ஸம்ரக்ஷணத்தை ஸங்கல்பமாத்ரத்தாலே நிர்வஹித்தருளமாட்டாமையில்லை; ஆயினும் வாத்ஸல்ய விசேஷத்தினாலே நேராகப் பொய்கைக்கரைக்கு எழுந்தருளிற்று அதைப்பற்றிக்

கேள்வியில்லை; கஜேந்திரனுடைய ரத்தமும் சீயும் மலிந்த பாதத்தைத் திருப்பவளத்தாலே தலைப்பை வேதுகொண்டு தடவிக்கொடுத்ததே, அது என்ன திருவுள்ளத்தினால்? என்று நான்காவது பாதத்தினால் கேட்கிறார் ஆழ்வான். என்றைக்கோ எங்கேயோ நடந்தவிதனை ஆழ்வான் எப்படி ஸாக்ஷாத்கரித்தார்? ஊனக்கண்ணை இழந்திருக்கிற ஆழ்வான் ஞானக் கண்ணாலேதான் இதனை ஸாக்ஷாத்கரித்திருக்கவேண்டும்; நடவாதத்தைப் பேசியிருக்க ப்ரஸக்தியில்லை.

இதிலிருந்து மற்றொன்றும் நினைவுக்கு வருகின்றது; அதனையுங் கேளீர்;—திருமங்கையாழ்வாரருளிச்செய்த திருவெழுகூற்றிருக்கையில்- "நாற்றிசை நடுங்க அஞ்சிறைப்பறவையேறி, நால்வாய் மும்மதத் திருசெவியொருதனி வேழத்தரந்தையை, ஒருநாளிரு நீர்மடுவுள் தீர்த்தனை, என்ற வாக்கியத்தில் கஜேந்திரரக்ஷணம் அநுஸந்திக்கப்படுகிறது' **வேழம்** என்பது கஜேந்திரம்; அதற்கு "நால்வாய் மும்மதத்திருசெவி" யென்று விசேஷணங்களிடப்பட்டிருக்கின்றன. **நால்வாய்** என்றது நாலுகின்ற (தொங்குகின்ற) வாயையுடையது என்றபடி. யானைக்கு வாய் தொங்குதல் இயல்பு, **மும்மதம்**—இரண்டு கன்னங்களிலும் குறியிலுமாக மூவிடங்களில் யானைக்கு மதப்புனல் சோரும்; **இருசெவி** இரண்டு காதுகளுடைமை (அல்லது) விசாலமான காதுகளுடைமை யானைக்கு இயற்கை. இவற்றை யிங்குச் சொல்லுவதற்குப் பிரயோஜன மென்னென்னில்? *[வியாக்கியான ஸ்ரீஸூக்தி]* "நால்வாய் மும்மதத் திருசெவி யென்றாற்போலே சொல்லுகைக்குக் கருத்தென்னென்னில், ப்ரஜைகிணற்றிலே விழுந்தெழுந்தால் காதும் கண்டவாளியும் காலும் தலையும் வடிவும் இருந்தபடிகாண்! என்பாரைப்போலே இடர்ப்பட்ட களிற்றின் அவயவங்கள் அவனுக்கு ஆகர்ஷகமாம்படியாலே சொல்லுகிறது" என்று. (அதாவது—) ஒரு குழந்தை கிணற்றில் விழுந்துபோக; அதனை யெடுத்துக்கரையிலே போட்டவர்கள் 'இவ்வழகிய குழந்தையை அநியாயமாய் இழக்கும்படி யிருந்ததே! அந்தோ! இதொரு காலழகும்! இதொருகையழகும்! இதொருதலையழகும்! இதொருமுகவழகும் என்னே என்னே! யென்று சொல்லி மாய்ந்து போவர்களாம்; அப்படியே எம்பெருமானும் யானையின் காலை முதலை வாயினின்றும் விடுத்தபின் அதனுடையவாயும் செவியும் முதலிய அவயவங்களிலே ஆழ்ந்து கரைந்தமை தோற்ற அந்த பகவத் ஸமாதியாலே யானையை வருணிக்கின்றார்.

# திருப்பிரிதி—ஜோஷீமடமல்ல

திருமங்கையாழ்வார் பெரிய திருமொழி தொடங்குகையில் முதற் பதிகத்தை "நான் கண்டுகொண்டேன் நாராயணாவென்னும் நாமம்" என்று தலைக்கட்டி இரண்டாம் பதிகம் முதலாக திவ்ய தேசாநுபவத்தில் இழிந்து, முந்துற முன்னம் பிரிதி சென்றடை நெஞ்சே! என்று திருப்பிரிதிக்கு ஒரு பதிகம் பாடினார். இத்தலம் இமயத்திலுள்ளதாகவும் பாசுரந்தோறும் காட்டியருளினர். ஸ்ரீபதரிகாச்ரமத்திற்கு ஸமீபத்தில் ஜோஷிமட் என்றொருதலமுள்ளது; அதுதான் பிரிதியென்பது என்று சிலருடைய கொள்கையாயிருந்தது. அறுபது ஆண்டுகட்குமுன்பு விஷ்ணுஸ்தல மஞ்ஜரி யென்றொரு புத்தகம் ஒரு பாகவதரால் வெளியிடப்பட்டிருந்தது. அதில்தான் பிரிதியாவது ஜோஷீமட் என்றிருக்கக்கண்டேன். அதில் அப்ரத்யய முண்டாக வழியில்லாமையால் ப்ரத்யய முண்டாயிற்று. அடியேன் மூன்றுவிசை ஸ்ரீபதரிகாச்ரம யாத்திரை செய்துவந்தேன். ஒரு பர்யாயத்தில் உபயவேத பாரங்கதர்களான எண்மரை உடனழைத்துக் கொண்டு சென்றிருந்தபடியால் வழி முழுவதும் வேதபாராயணமும் அருளிச்செயல் ஸேவையுமாக நிகழ்ந்தது. ஜோஷீமட் என்கிற தலத்தில் பெருமாளுக்குத் திருமஞ்சனம் செய்வித்து க்ஷீராந்நமமுது செய்வித்து 'வாலிமாவலத்தொருவனதுடல்கெட' என்கிற திருப்பிரிதிப்பதிகத்தையும் ஸேவித்தோம். அந்த யாத்திரையில் அந்வயித்தவர்களில் இப்போது உள்ளவர்கள்;— ஸ்ரீமதுபயவே ஸ்ரீபெரும்பூதூர் மணவாள (ஸாமி) திருவேங்கடாசாரியர். மாம்பள்ளம் தி. வி. பாஷ்யகாராசாரியர், திருநீர்மலை கோமடம் ஸ்ரீநிவாஸாசாரியர் நூஜிவீடு நடாதூர் சடகோபாசாரியர் ஆகியவர்கள். இது நிற்க;

ஸ்ரீமதுபயவே புத்தூர் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சந பத்ராதிப ஸ்வாமி வதரியாத்திரை செய்து வந்தபின் திருப்பிரிதி ஜோஸீமடமன்று என்பதை உபபத்திகளுடன் ஸாதிக்கக்கேட்டு அதில் நம்பிக்கையுங் கொண்டேன். அது நம்மவர்கள் ஸேவிக்கப் பெறுததும் ஸேவிக்க முடியாததுமான திவ்ய தேசம் என்றே நினைக்கிறேன். எந்த ஸ்தலத்தில் வாஸஞ்செய்பவர் 'இது பிரிதி' என்று வழங்குகிறார்களோ அதுதான் பிரிதியாகும் ப்ரீதி யென்னும் வடசொல் பிரிதியெனத் திரிந்தது என்பதாக அடியேன் அநுமானமாக எழுதிவைத்திருப்பதுண்டு.

பிறகு அதில் அடியேனுக்கே ஔசித்யம் தோன்றவில்லை. தமிழர் களும் திவ்யப்ரபந்தவித்துக்களுமானவர்களுக்கு அத்தலம் உறைவிட மாகத் தெரியவில்லை.

பெரியாழ்வாரொருவர் மட்டும் ×தங்கையை மூக்கும் தமையனைத் தலையும் என்கிற பதிகத்தினால் கண்டமென்னுங் கடிநகரைப் பாடியுள் ளார். பதரிகாச்ரம மார்க்கத்தில் தேவப்ரயாகமென்கிற க்ஷேத்திரந்தான் அதுவென்று எல்லாரும் நிர்விவாதமாக ஸேவித்து வருகிறார்கள். அந்தப் பதிகத்தில் ''நலந்திகழ் சடையான் முடிக்கொன்றை மலரும் நாரணன் பாதத்துழாயும், கலந்திழிபுனலால் புகர்படுகங்கைக் கண்ட மென்னுங் கடிநகரே'' என்கிற பாசுரம் நற்சாக்ஷியமளிக்கின்றது.

ஸ்ரீ காஞ்சீபுரியில் அட்டபுயகரத் தெம்பெருமானை மங்களாசாஸ னம் பண்ணுநின்ற திருமங்கையாழ்வார் ''செந்தமிழ்பாடுவார்தாம் வணங்கும் தேவரிவர் கொல்'' என்றருளிச்செய்தார். திருமுக மண்ட லத்தை ஸேவித்தவுடனே இவர் முதலாழ்வார்களின் மங்களாசாஸனம் பெற்றவராயிருக்கவேணுமென்று தோன்றியது போலும். அவ்வாறே கண்டமென்னுங் கடிநகர்ப் புருஷோத்தமன் திருமுகமண்டலத்தை ஸேவித்தவாறே ''இவர் ஆழ்வார் பாடல் பெற்றவராயிருக்கவேணும்'' என்று அடியேனுக்குத் தோன்றினதை அந்த தேவாலயத்தில் அதிகாரி கள் காப்பாற்றி வருகிற ''காதா''வில் பொறித்து வைத்திருக்கிறேன், ஐம்பது வருஷங்களுக்கு முன்.

இந்த விண்ணப்பத்தின் முடிவாவது அடியேனுடைய ஆராய்ச்சி யில் பிரிதி என்பதை நிர்ணயிக்க முடியவில்லை என்பதே.

# திவ்யதேசத் திருநாமங்களின் மாறுபாடுகள்

**மலைநாட்டில்;—** திருவண்பரிசாரத்தைத் திருப்பதிசார மென்பர்கள். திருவல்லவாழைத் திருவல்லாய் என்பர்கள். திருவாறன் விளையை ஆரம்முளை யென்பர்கள். பாண்டி நாட்டில் ஆழ்வார் திருநகரி நவதிருப்பதிகளில்— தென்திருப்பேரெயில்'' என்கிற முழு நாமத்தை அறிந்தவர்கள் சிலரே; திவ்யப்ரபந்தப் பதிப்புகளில்

*வெள்ளைச் சுரிசங்கு பதிகத்தில் பாசுரந்தோறும் "தென்திருப்பேரை யில்" என்று அச்சிட்டிருக்கிறார்களே யொழிய, ஒரு பாசுரத்திலும் "**பேரெயில்**" என்றில்லை.

**வரகுணமங்கையை** நத்தம் என்றே பெரியாரும் வழங்கி வருகிறார்கள்; வரகுணமங்கையென்றால் எங்கிருக்கிறதென்கிறார்கள். சோழநாட்டில் திருநாங்கூர்ப்பதிகளில் **திருத்தேவனார்தொகை** யைக் கீழைச்சாலை யென்றே வழங்கி வருகிறார்கள் யாவரும்.

**திருக்குடந்தையைப்** பற்றி ஒரு முக்கியமான ஆராய்ச்சி. வடமொழியில் **கும்பகோணம்** என்பது இது. **கோண** மென்றால் மூக்கு; குடமூக்கில் கோயிலாக்கொண்டு என்றார் பூதத்தாழ்வாரொருவர் மட்டும். மற்றை யாழ்வாரொருவரும் **குடமூக்கு** என்னவுமில்லை, கும்பகோணமென்னவுமில்லை. " குடமூக்கிலே ப்ரவஹிக்கும்" என்பது ஆசார்யஹ்ருதய ஸ்ரீஸூக்தி, க்ஷேத்ரமாஹாத்ம்யத்தில் கும்பகோண மென்றே யுள்ளது. அத்திருநாமம் தமிழ் நூல்களிற் புகாதது என்னோ?

சோழ நாட்டில் தஞ்சையின் பரிஸரத்தில் கபிஸ்தலமென்கிற திவ்யதேசம் ப்ரஸித்தமாயுள்ளது நான்முகன் திருவந்தாதியில் (திருமழிசைப்பிரான்) "ஆற்றங்கரை கிடக்குங்கண்ணன்" என்றுள்ளதே யன்றி கபிஸ்தலமென்று ஓராழ்வார் திருவாக்கிலும் வெளிவரவில்லை. பிள்ளைப்பெருமாளியற்றிய நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியிலும் பெரியவாச்சான்பிள்ளையின் திருவந்தாதி வியாக்கியானத்திலுமுள்ளது. அவர்கள் ஸ்வதந்த்ரமாக அருளிச்செய்யார்கள்: அப்படிக்குடத்தான் ஸன்னிதியென்கிற திருப்பேர்நகரும் ஆற்றங்கரையிலுள்ளதன்றோ?

ஸ்ரீகாஞ்சீபுரியில் நீரகம் காரகம் கார்வானம் முதலான திவ்ய தேசங்கள் 70, 80 ஸம்வத்ஸரமாக திருவூரகமென்கிற உலகளந்த பெருமாள் ஸன்னிதியில் ஒன்று சேர்க்கப்பட்டுள்ளார்கள் பேரேற்று பட்டர் ஸ்வாமியால். அதற்குமுன் இவர்களை ஸேவித்தவர்களில்லை யென்கிறார்கள். இப்போதும் அர்ச்சகர் சொல்லுவதைக் கொண்டே திருநாமத்தை யறியவேணும் இவ்வாறாக, திருப்பிரிதி எவ்விடத்தில் எங்ஙனம் வழங்கப் பட்டு வருகிறதோ?

ஸ்ரீ:

# கம்பர் கண்ட கண்டீரவம்

(ஸ்ரீகாஞ்சீ. அண்ணங்கராசாரியர் தொகுத்தது)

---

கம்பர் தமது ராமாயணத்தில் யுத்த காண்டத்தில் இரணியன் வதைப்படலமென்று ஒரு படலமிட்டு அதில் இரணியாசுரனது செய்கைகளையும் நரசிங்கப் பெருமானது பெருமைகளையும் அபூர்வமாகவும் விரிவாகவும் கூறியுள்ளார். விபீஷணாழ்வான்-இராவணனுக்கு இதமுரைக்குங்கால் 'பண்டு இரண்யாசுரன் பட்டபாடுகளைக் கேளாய்' என்று தொடங்கிக் கூறுவதாக வைத்து இப்படலத்தைச் சேர்த்துள்ளார். இதிற் காண்கிற படியே சரிதம் வரையப் படுகின்றது.

## — இரணியனது தவமும் வலிமையும் —

முற்காலத்தில் இரண்யகசிபு வென்று ஓர் அசுரர்தலைவன் இருந்தனன். அவன் அரிய பெரிய தவம்புரிகையில் அதற்கு உவந்து பிரமன் ப்ரத்யக்ஷமானபொழுது வேண்டியவாறெல்லாம் வரம்வேண்டி அவற்றைப் பிரமன் கொடுக்கப்பெற்ற பின்னரே அவன் தவத்தினின்று மீண்டனன். பஞ்சபூதங்களுக்கும் தனித் தனி எவ்வளவு வலிமையுண்டோ அவ்வளவும் அவன் ஒருவனே பெற்றிருந்தான். அப்படிப்பட்ட அவனது வலிமை அரனுக்குமயனுக்கும் அளவிட்டறிந்து அழிக்கவொண்ணாததாயிருந்தது. இந்த ஓர் அண்டத்தில் மாத்திரமேயன்றி எல்லா அண்டங்களிலும் அவன் பெயர் அனைவராலும் போற்றப்பட்டு வந்தது. பூமியின் கீழே எட்டுத் திசைகளிலும் நிலைநின்று பூமிபாரத்தைத் தாங்குகின்ற ஐராவதம் முதலிய அஷ்டதிக்கஜங்களுள் எவையேனும் இரண்டைத் தனது இரண்டு கைகளாலும் வலியப் பிடித்திழுத்து அவற்றை ஒன்றோடொன்று தாக்கிவிட்டு வேடிக்கை பார்ப்பது அவன் வழக்கம். கடல்களையெல்லாம் ஒரே தாண்டாகத் தாண்டி அப்பாற் செல்லுமியல்வினன்.

அவன் நதிகளிலும் நீராடான், காளமேகத்தினின்று சொரியும் நீரிலும் குளியான்; கடல் நீரிலும் படியான்; பின்னையோ வென்னில், அண்டகோளத்தை ஒரு பக்கத்தில் துளை செய்து அதற்கப்பாலுள்ள

பெரும்புறக்கடலின் நீர் அத்துளையின் வழியாக அண்டத்தினுள்ளே பெருக அதனைக்கொண்டே நீராடுவான். இங்ஙனம் நீராடி நாகலோகத்திலே சென்று அங்குள்ள நாககன்னிகைகளோடிருந்து நற்போகங்களைப் புசித்து, தேவேந்திரலோகத்திற் பகற்காலத்தைக் கழித்து இராப்பொழுதில் பிரமலோகத்திற் கொலுவீற்றிருப்பான். சந்திரன் ஏறிச்செல்லும் விமானத்தில் தான் ஏறித் திரிந்து அவனது அதிகாரத்தைத் தான் செலுத்துவான். அங்ஙனமே ஸூர்யனது தேரில் ஏறி நின்றுகொண்டு அவனது பெரிய பதவியின் அதிகாரத்தையும் தானே செலுத்துவான். அஷ்டதிக் பாலகர்களின் இடங்களிலிருந்து அவர்களுடைய தொழில்களையெல்லாம் கைக்கொண்டு நடத்துவான். மேருமலையுச்சியில் பிரமன்போல அரசாட்சி புரிந்துகொண்டு வீற்றிருப்பான். பஞ்சபூதங்களுக்கு அதி தேவதைகளாகிய தேவர்களை அந்தந்தப் பதவியில் நின்று ஒழித்து அவர்களின் தொழில்களையும் தானே நடத்துவான்.

## — இரணியனது மேம்பாடுகள் —

உலகங்களில் அவரவர்கள் வைதிகலௌகிக ஸமயங்களில் ஸ்ரீமந் நாராயண மூர்த்தியின் திருநாமங்களைக் கூறும் வழக்கத்தை அறவேயொழிக்கும்படி அச்சமுறுத்தித் தனது இரணியனென்ற பெயரையே கூறும்படி செய்து வந்தனன். அன்றியும், முனிவர் முதலியோர் யாகங்களில் மந்திரபூர்வமாகத் தேவர்களை யுத்தேசித்து இட்டு ஓமஞ்செய்கிற ஹவிர்ப்பாகங்களை யெல்லாம் தானே கைக் கொண்டு உண்பான். த்ரிமூர்த்திகளும் தம் தம் தொழில்களைச் செய்து முடிக்க மாட்டாதவர்களாய்த் தங்கள் உரிமையை விட்டொழிப்பாராயினர். யோகப் பயிற்சியில் தேர்ந்த முனிவர்களும் தம் யோகபலத்தாற் பெறும் பதவிகளைப் பெருது அவனால் இழந்து விட்டார்கள். தேவர்களும் அவனது பாதங்களை யன்றி வேறொன்றைப் பூசிக்க விரும்பாதாராயினர்.

## —இரணியன் சாவா வரம் பெற்றது—

இவ்விரணியன் தனது பாதங்களைத் தரையிலே ஊன்றி வைப்பானாயின் பூமியைத் தாங்கும் ஆதிசேஷனும் மயங்கித் தளர்வான்; எழுந்து நிற்பானாயின் அண்டகோளத்தின் மேல் முகடு தலையிற்படும்படி அதுவரையிலும் உயர்வான்; இடம் விட்டுச் சஞ்சரிப்பானாயின்

தனது வலிய விசையால் பஞ்ச மஹா பூதங்களும் தன்னோடு கூடவே நிலை பெயர்ந்து வர அவற்றுடனே நடப்பான். அவன் தான் பெற்ற வரத்தினால் பெண்களாலும் ஆண்களாலும் நபும்ஸகராலும் மற்றுமெந்தப் பிராணிவர்க்கங்களாலும் உயிரில்லாதவற்றாலும், மற்றும் கண்களாற் காணப் படுங்காட்சிப் பொருள்களுள் எதனாலும், மனத்தாற் கருதப்படுங் கருத்துப் பொருள்களுள் எதனாலும் இறக்கமாட்டான். பூமியிலும் சாகமாட்டான், ஆகாயத்திலும் சாகமாட்டான். தேவர்களாவது யக்ஷர்களாவது திரிமூர்த்திகளாவது தன்னைக் கொல்லப் பெறான்; வலிமை சிறிதும் ஒடுங்கான். வீட்டினுள்ளேயும் வெளியிலேயும் சாவான். அஸ்த்ர சஸ்த்ரங்களாலும் கொலையுண்ண மாட்டான். இரவிலுஞ் சாவான். பகலிலுஞ் சாவான். இங்ஙனே பலவகைகளையும் பகுத்துக் கூறிச் சாவரவரம் பெற்றிருந்தான்.

### —இரணியன் தன்மகனான பிரகலாதனைப் பள்ளியிலோத விடுதல்—

இங்ஙனம் மஹா வீர சூரனான இவ்விரணியனுக்கு ப்ரஹ்லாதனெனும் பெயருடைய அருமைப் புதல்வனொருவனிருந்தான். அவன் அறிஞர்களிற் சிறந்த அறிஞன். தூயவர்களில் தலைவனான தூயவன். பகவத் பக்தர்களில் மேம்பட்ட மஹா பக்தன். பல சொல்லியென்? ஸகல ஸத்குண ஸம்பன்னன். இளையோனான அவனைத் தந்தையாகிய இரணியன் வெகு அன்போடும் ஆதரவோடும் வளர்த்து வந்து மிக்க உவப்புடனே ஒரு நன்னாளில் கல்விபயிலத் தொடங்குமாறு கட்டளையிட்டனன். உடனே அசுரகுருவை வரவழைத்து 'என் அருமைக் குழந்தைக்குக் கல்விபயில்விப்பாயாக' என்று சொல்லிக் குமாரனைக் குருவிடம் ஒப்புவித்தனன்.

### —பிரகலாதன் 'ஹிரண்யாய நம:' என்னப் பொறாமை—

உடனே மைந்தனைப் பள்ளிக்கு அழைத்துச் சென்று கல்வி கற்பிக்கத் தொடங்கிய ஆசிரியன் "ஹிரண்யாய நம:" என்று முந்துறச் சொல்லி ஆரம்பம் செய்கிற வழக்கப்படி ப்ரஹ்லாதனை நோக்கிக் கட்டளையிட்டவுடனே அச்சிறுவன் தனது இரண்டு காதுகளையும் இரண்டு கைகளால் நன்றாக மூடிக்கொண்டு 'பெரியோனே! நீ சொன்னபடி சொல்வது நல்லொழுக்கமன்று, முறைக் கேடு' என்று கூறி மறுத்து, வேதாந்த விழுப்பொருளான உண்மைக் கடவுளின் திரு

நாமத்தை வெளியிட்டுக் கூறினன். திருவஷ்டாக்ஷர மஹாமந்திரத்தை உரக்க உச்சரித்து, உள்ளெலாமுருகிக் குரல் தழுத்து உடம்பெலாம் கண்ணநீர் சோர நின்று முடி மீது அஞ்சலி செய்து ஸ்ரீமந்நாராயணனைத் தியானித்து உள்ளம் பூரித்திருந்தான்.

— அசுரகுரு பிரகலாதனைக் கடிந்து கூறல் —

அதுகண்டு அந்தக் குரு உள்ளமும் உடம்பும் நடுங்கப்பெற்று, 'கெடுவாய்! குருவாகிய என்னையுங் கெடுத்து மாணுக்கனுகிய உன்னையுங் கெடுத்துக்கொண்டாய். நமது பகைவர்களான அந்தத் தேவர்களும் சொல்லத்தகாததாய் என் வாயால் அநுவாதம் செய்யவும் தகாததான வொரு வார்த்தையை நீ சொல்ல மனங்கொண்டது என்னே! இது என்ன ஆச்சரியம்! இப்படியும் ஒரு காரியம் செய்து விட்டாயே! என்று பொடிந்தான்.

— பிரகலாதனுக்கும் குருவுக்கும் ஸம்பாஷணை —

பிரகலாதன்:—குருவே! என்னை நான் ஈடேறச் செய்துகொண்டேன், எனது தந்தையையும் ஈடேற்றினேன்; எனக்குக் குருவாக அமைந்த உம்மையுமீடேற்றி இவ்வுலகத்தின்கணுள்ள எல்லாவுயிர்களையுமீடேற்றத் தொடங்கி முதுவேதத்தின் ஸாரமாகிய நாராயண நாமத்தைச் சொன்னேன், இதில் என்ன குற்றம்? சொல்லும்.

குரு:—பயலே! உன் தந்தையானவர் தேவர்களனைவர்க்கும் தலைவர்களான திரிமூர்த்திகளுக்கும் தலைவர்; அவரது திருநாமத்தை மதித்திருக்கின்ற என்னிற்காட்டிலும் நீ அறிஞனோ? அடா! இப்பொழுது நீ சொன்ன பெயரை மறுபடியுஞ்சொல்லி என்னைக் கெடுக்காதேகொள்.

பிரகலாதன்:—முழுமுதற் கடவுளாகிய ஸ்ரீமந்நாராயணமூர்த்தியின் திருநாமமல்லது மற்றொன்று நானறியேன். அந்தத் திருமால் எப்பொழுதும் எனது உள்ளத்துள்ளே உறைகின்றார். அவரது திருநாமத்திற்காட்டிலும் சிறந்த சொல் வேறில்லை. வேதமறிந்த முனிவர்களும் உபநிஷத்துக்களும் ஒருமுகமாகக்கொண்டாடும் தெய்வத்தின் திருநாமத்தையன்றோ நான் சொல்வது. இதனில் மிக்கதோர் திருநாமம் உலகில் உளதோ? வேதங்களைக் கொண்டும் மற்றுமுள்ள

பல்வகைச் சாதனங்களைக் கொண்டும் சித்திபெறும் மஹாத்மாக்கள் ஜபஞ்செய்யும் திருமந்திரத்தையன்றோ நான் கூறினேன்; வனங்களிலும் பெரியமலைகளிலும் வசித்துத் தவவேடம் பூண்டு முத்தியடைபவர்கள் பெறும் ஆனந்தத்தை யன்றோ நான் இத்திருநாமத்தினால் பெற்றது; இத்திருநாமத்தின் மகிமை அளவிடக்கூடியதோ? பல ஆசிரியர்களிடம் பலகால் கேட்டு உணரவேண்டிய பல நூற்பொருள்களையும் நான்கு வேதங்களின் உட்பொருள்களையும் இத்திருநாமத்தினின்றுமே உண்மைப்பத்தர்கள் உணரப் பெறுவர்கள். எனக்கும் நான்முகன் முதலிய தேவர்கட்கும் ஸர்வஜ்ஞனான தனக்கும் அறியநிலமல்லாத வைபவங்களையுடைய ஸ்ரீமந்நாராயணன் என்மனத்திற் குடிகொண்டுளன்; ஆதலால் நான் மெய்ப்பொருள் கண்டவனாயினேன்; உனக்கும் இப்பொருளே காண் தஞ்சமாவது—என்று இனைய பலவுங் கூறினன்.

## —பிரகலாதனை இரணியனிடம் கொண்டு சேர்த்தது—

இவ்வளவுங் கேட்ட ஆசிரியன் அச்சிறுவனுக்கு யாதொரு மறுமொழியுங் கூறமாட்டாதவனாய் மனங்கலங்கி 'இனி நான் ஈடேறும் வழி என்னே! எனக்கு அழிவுகாலம் வந்திட்டதுபோலும்' என்று சிந்தித்துக்கொண்டு ஓடிச்சென்று இரணியனிடம் சேர்ந்து கனக்கண்டவன் அதிசயங் கூறுமாறு போலக் கூறத் தொடங்கி, "மஹாப்ரபுவே! உனது மகன் நெஞ்சால் நினைத்தற்கும் வாயாற்சொல்லுதற்கும் தகாததானவற்றைச் சொல்லிக்கொண்டு கல்வி பயிலாதிருக்கின்றனன்" என்றான். அதுகேட்ட இரணியன் குருவை நோக்கி என் மகன் சொன்னவற்றைச் சொல்லாய் என்றான். அதற்குக் குரு தலைமேல் அஞ்சலி செய்துகொண்டு "நாதனே! காதுக்கு நாராசம் போன்ற அச்சொல்லை நான் உனக்குச் சொன்னால் நரகத்தையடைவேன், நாவும் வெந்து போம்" என்றான். அதுகேட்ட இரணியன் 'எனது புதல்வனை வெகு சீக்கிரமாக இங்கு அழைத்து வாருங்கள்' என்று ஏவலாளர்க்குக் கட்டளையிட, அவர்கள் ஓடிச்சென்று ப்ரஹ்லாதனிடம் தந்தை கட்டளையைத் தெரிவிக்க, உடனே அவன் தாதையிடம் வந்து வணங்கி நின்றான். அன்னவனை இரணியன் மார்பாரப் புல்கி அருகே உட்கார வைத்து, 'குழந்தாய்! உனது குரு வெறுக்கும்படி நீ ஏதோ தவறாகச் சொன்னாயாமே, அச் சொல் யாது? சொல்லு' என்றான்.

—பிரகலாதனுக்கும் இரணியனுக்கும் ஸம்பாஷணை—

ப்ரணவஸ்வரூபியாய் உலகுக்கெல்லாம் ஒப்பற்ற தனி நாயகனான கடவுளின் திருநாமமே யான் கூறியது. உபதேசமாகக் கேட்டுணர்தற்கும் சிந்தனை செய்தற்கும் பிறவித் துன்பக்கடலைக் கடத்தற்கும் மிக உரியதான இத் திருநாமத்திற் காட்டிலும் சிறந்தது வேறொன்றுமில்லையே; குரு வெறுக்கத்தக்கதொன்றும் யான் சொல்லவில்லையே.

**இரணியன்:**— (குரு பொய் சொல்லியிருக்க மாட்டார்; உள்ளது உள்ளபடியே கூறுமியல்பினராதலால் அவர் சொன்னதில் பொய்ம்மை ஒன்றுமிராது; குற்றமிருப்பின் தண்டிப்போம் என்று எண்ணி) குழந்தாய்! நீ சொன்ன அச்சொல்லை விளக்கமாகக் கூறுவாயாக என்றான்.

**பிரகலாதன் :**— அறம் பொருளின்பங்களுள் விரும்பிய பலன்களையெல்லாம் கொடுப்பதும் மோக்ஷத்தையளிப்பதுமான எம்பிரான் திருநாமமே நான் சொன்னது; அதற்குத் தான் திருவஷ்டாக்ஷர மஹா மந்த்ரமென்று பெயர். எல்லா உலகங்களிலும் சராசரப் பொருள்கள் அனைத்தின் உணர்ச்சியும் செல்லுதற்கு ஏற்ற இடமாவது அந்தத் திருவெட்டெழுத்தேயாம். சிவபிரான் நான்முகக் கடவுள் முதலாகச் சாதாரண மனிதர்களளவும் இந்தத் திருமந்திரத்தை மறந்தவர் இறந்தவரேயாவர். இதன் மகிமை பிறர்க்கு விவரித்துக் காட்டமுடியாது; நிஷ்பக்ஷபாதமாகப் பார்க்கவல்ல தெள்ளியஞானம் படைத்தவர்களே இதன் மகிமையை நன்றாகக் கண்டறிந்துள்ளார்கள். அல்லாத பிறர் சிறிதுமறியார். ஸம்ஸாரக் கடலைக் கடக்கச் சிறந்த மரக்கலமாயுள்ளதும், எல்லோர்க்கும் ஆபரணம் போலப் பொலிவு செய்வதும், மங்கலச் சொற்களுள் தலைமை பெற்றதும், உபநிஷத்துக்களின் சித்தாந்தமான தத்துவப் பொருளுமாகப் பிரசித்திபெற்ற இத் திருமந்திரத்திற் காட்டிலும் சிறந்தது வேறில்லை. உனது உயிர்க்கும் எனது உயிர்க்கும் மற்றுமெல்லாவுயிர்கட்கும் இத் திருமந்திரமே எல்லா நன்மைகளையும் விளைக்கவல்லது என்று நன்றாக ஆலோசித்தே இதனை நான் சொன்னேன் என்று வெகு கம்பீரமாகச் சொல்லி முடித்தான்.

—இரணியன் பிரகலாதனிடம் விஷ்ணு நிந்தை செய்தல்—

பிரகலாதன் இங்ஙனஞ் சொல்லக்கேட்ட இரணியன், அடா பயலே! நான் பிறந்த நாள் தொடங்கி இன்றளவும், நீ குறித்த பெய

ரைச்சொன்ன வாயையும் சிந்தித்த நெஞ்சையும் என்னுடைய ஆணை சுடுமென்பது மூவுலகிலும் ப்ரஸித்தம்; அப்படியிருக்க இந்தப் பெயரை உனக்குச் சொன்னவர் ஆர்? நீ இதனை யாருடனே கற்றுக் கொண்டாய்? மும்மூர்த்திகளும் மற்றைத் தேவர்களும் முனிவர்களும் எப்பொழுதும் சிந்திப்பது என் கழலிணையே, துதிப்பது என் பெயரே; ஆதலின் அவர்களெல்லோரும் உனக்கு இந்தப் புதிய பெயரைக் கூறுவதற்கு அஞ்சுவர்களே; பிள்ளாய்! இதனை நீ வேறு யாரிடத்து உணர்ந்தாய்? என்னோடு போர் செய்யும்பொருட்டுப் பலதரம் எதிர்த்துவந்து என் முன் நிற்க மாட்டாமல் கருடனது வேகத்தால் தப்பியோடிச் சென்று மறைந்து பாற்கடலிலே புகுந்தொளித்துக்கொண்டு இன்னமும் வெளிவராமல் உறங்குபவனாகிய விஷ்ணுவின் பெயரை உனக்கு எல்லா நன்மைகளையும் விளைவிப்பதாகக்கூறினவர் யாரோ? நம் குலத்தில் தோன்றிய எண்ணிறந்த பல பெரியோர்கள் அந்த விஷ்ணுவினால் அழிந்தவர்களாயிருக்க இதனை நீ அறிந்துவைத்தும் அவன் பெயரைச் சொல்லத்துணிந்த துர்ப்புத்திஎன்னோ? தன் இனத்திற்குப் பகையாகிய பாம்பின் பெயரை எலி பக்தியோடு கூறுவதுமுண்டோ? வலிமையிற் சிறந்த எனது உடன்பிறந்தவனான ஹிரண்யாக்ஷனை ஒரு பன்றியின் வடிவமாய்த் தோன்றிக் கொன்றவனது பெயரைப் பகர்வதற்காகவோ உன்னை நான் பிள்ளையாகப் பெற்றது?

—இரணியன் பிரகலாதனிடம் தன்பெருமை] கூறிமுடித்தல்—

எவ்வுலகங்கட்கும் எவ்வுயிர்கட்கும் நானே தலைவனாகவும் நானே எல்லாப் பொருள்களையும் படைத்துக்காத்து அழிக்கவல்லவனாகவுமிருக்க இந்த ப்ரத்யக்ஷ ப்ரமாணத்தைக்கொண்டு என்னையே முழுமுதற் கடவுளாகத் துணிதலை விட்டுக் காணப்படாதானொருவனைக் கடவுளாகத்துணிய உனக்கு மனம் வந்ததே! நீ வாழக்கடவையோ? ஆதிகாலத்தில் தவமகிமையினால் விஷ்ணுவென்றும் பிரமனென்றும் சிவனென்றும் சிறந்த நிலைமையை யடைந்தவர்கள், யான் பின்பு கொடுந் தவம் புரிந்து தலைமையை யடைந்ததனால் எனது பாதுகாப்பின் கீழ் அடங்கியுள்ளார்கள். அசுரர்களாகிய நமக்கு இயற்கையிற் பகைவர்களான திருமால் முதலிய தேவர்கள் என் சிறப்பைக்கண்டு அசூயை கொண்டு என்னினுஞ் சிறப்பாக யாகமும் தவமும் செய்வாராயின் அவர்கள் என்னினும் மேம்படக் கூடுமென்றெண்ணி நான் அவர்களை

அங்ஙனஞ் செய்யவொட்டாதபடி எனது வலிமையால் தடுத்திட்டேன்; அன்றியும் அப்படிப்பட்ட சிறந்த யாகம் தவம் என்பவற்றின் தன்மையை அறியலாம்படி அவர்கள் சாஸ்த்ர விசாரஞ் செய்தலும் கூடாதென்று மறுத்திட்டேன்: ஆகவே அவர்கட்கு என்னிலும் மேம்பாடு அடைய ஒருபடியாலுமாகாது; ஆகையால் அவர்களெல்லாரும் என்னையே தங்களுக்கெல்லாம் கடவுளாகக் கொண்டு தங்கள் காரியங்களிலெல்லாம் என்னையே துதித்து வாழ்கின்றனர் காண்; பயலே! இப்போது நீ தவறு செய்ததை நான் பொறுத்தேன்; மீண்டும் இத்தன்மையனவான பயனற்ற வார்த்தைகளைச் சொல்லாதே: குருவின் கட்டளையே காக்கத்தக்கதென்று துணிந்து இனி அவரது கட்டளையின்படி கல்விபயில்வாயாக; போ,—என்று மிகுந்தகோவக்குறியுடன் சொல்லி முடித்தனன்.

## —பிரகலாதன் இரணியனுக்குத் தத்துவ முணர்த்தல்—

இவ்வளவுஞ் சொல்லக்கேட்ட ப்ரஹ்லாதன் மீண்டும் தந்தையை நோக்கிச் சொல்லலுற்றான்;—அப்பா! உனக்கு நான் உணர்த்த வேண்டுவன பலவு முண்டு; கேளாய்: கல்விச் சாரமாக யான் சொல்லும் வார்த்தை சுருக்கமுடையதாயினும் பிறருடைய சாதாரணமான கல்வி ஞானம் முழுவதையும் தன் வசமாக்கவல்லது; அங்ஙனம் யான் சொல்வதைக் கேளாய். ''வித்தின்றி விளைவதொன்றில்லை'' என்னும் பழமொழி உனக்குத் தெரியாததன்றே. மூலகாரணப் பொருளாகிய கடவுளொருவரில்லாமல் பிரபஞ்சத் தோற்றம் நிகழாது காண். நீ கொண்டுள்ள விபரீத ஞானத்தை யொழித்து உண்மையை யுணர விரும்புவாயானால் தத்துவப்பொருளை உனக்குக் கையிலங்கு நெல்லிக் கனியாகக் காட்டித் தருவேன். ஆதியில் உலகங்களைப் படைத்தவனும் பிரளய காலத்தில் அவையனைத்தையும் தனது திருவயிற்றினுள்ளே அடக்கிவைத்துப் பாதுகாப்பவனும், எல்லாப் பொருளினிடத்தும் அந்தர்யாமியாய் எள்ளினுள் எண்ணெய்போல உள்ளும் புறமும் கலந்து பொருந்துபவனும் அவனே காண். வேதாந்தமாகிய உபநிஷத்துக்களில் தெளிந்து சித்தாந்தப்படுத்திக் கூறிய பரதத்துவம் அவனே காண். இத்தத்துவமுணரும் பாக்கியம் மாஞானிகட்கே உள்ளதொன்றாம். சகலப் பிரபஞ்ச வடிவமாய்ப் பரிணமித்துப் பல்வேறு வகையாகத் தோன்றினும் தனது தனி நிலைமை மாறுபடாமலே யுள்ள அக்கடவுளின் தன்மை யாவராயினும் அறியும்படி ஓரளவிற்பட்ட

